Bibliographic Record Target

*ஜமீலுத்தீன் மிஸ்பாஹி, மௌலவி K. A.*
*முஸ்லீம்கள் யார்?. -- புதுவை : ஜோதி பிரஸ், [194-?]*
*14 p. ; 13 cm.*
*Record no. 80846*

*Jamīluttīṉ Mispāhi, Maulavi K. A.*
*Muslīmkaḷ yār?. -- Putuvai : Jōti piras, [194-?]*
*14 p. ; 13 cm.*
*Record no. 80846*

பிஸ்மில்லாஹி.

# முஸ்லீம்கள் யார்?

ஆக்கியோன் :–

மௌலவி K. A. ஜமீலுத்தீன் [மிஸ்பாஹி]

விலை ] [ அணா 2.

## முன்னுரை.

பேரன்புமிக்க பெரியோர்களே!

தாங்கள் அறிஞர்கள் தீட்டியுள்ள பல நூல்களை படித்திருப்பீர்கள். ஆனால், இச்சிறிய நூலை தீட்டிய வன் அறிஞரின் கூட்டத்திலே இடம் பெற்றவனல்ல சாதாரணதோர் மனிதனே. அக்காலத்தில் வாழ்ந்த முஸ்லீம்களின் நிலையையும், இக்காலத்தில் வாழும் முஸ்லீம்களின் நிலையையும், நோக்குமிடத்து வானத் திற்கும், பூமிக்குமிடையேயுள்ள வித்தியாசமாக இருக்கின்றது. அக்கால மக்கள் உண்மை முஸ் லீமாக வாழ்ந்து, இறைவனுக்கு நல்லடியானாக உயிர் இழந்தார்கள். நம் சமுகத்தில் வாழும் மக் களை உண்மை முஸ்லீமாக இஸ்லாமதத்திற்கு பாடுபடக்கூடியவர்களாக திகழ்கிருர்களா? என்று நோக்குமிடத்து இல்லை என்றுதான் கூறமுடி யும், ஆகவே அறிவுக்கு எட்டிய மட்டிலும் சிறிய தோர் நூலை எழுதுவோம் என்று என் சிந்தனை கூறவே ''முஸ்லீம்கள் யார்'' என்ற நூலை என் சிறிய அறிவுக்கு எட்டிய மட்டிலும் எழுதி இருக்கிறேன் அதில் அனேக எழுத்து பிழைகளையும், வார்த்தை பிழைகளையும் நோக்கலாம். அவைகளைதிருத்திக் கொடுத்து, எங்கட்கு மென்மேலும் ஊக்கமீ ஊட்டும் படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

இப்படிக்கு,

மௌலவி K. A. ஜமீலுத்தீன் [மிஸ்பாஹி]



786

# முஸ்லீம்கள் யார்?

## சகலபுகழும் இறைவனுக்கே!

மனிதன் மனிதனாக வாழ, மடமை கூண்டை விட்டு விடுதலைப்பெற்று நல்வழியில் அழைத்துச்செல்ல, மனித தனங்களை விட்டு மக்களாக வாழ்ந்தோரை மக்களுக்கு, ஒவ்வொரு சமுதாயத்திற்கும் தனித்தனியாக ஆயிரக் கணக்கான நபிமார்களை அனுப்பிக்கொண்டிருந்தான் இறைவன். இறுதியாக சமுதாய அடங்கட்குமே இறுதி தூதராக ஓர் நபியை அனுப்பவேண்டுமென்றெண்ணிய இறைவன், உலகிற்கு அறிவு சுடருக; அன்பின் திரு வுருவாக; பொருமையின் இருப்பிடமாக; விண்ணின் பல வான்மீன்களிடையே வெண்கதிரோன் தோன்றினல் அதன் ஜோதி எவ்வாறு மங்கிவிடுகிறதோ; அவ்வாறான ஓர் குழந்தையை அப்துல்லாவின் மனைவி ஆமினம்மாவின் கர்ப்பத்திலே பிரசவிக்கச்செய்தான், அதுவேதான் அக் குழந்தை!





சமுதாயத்தில் மக்கள் எடுத்ததிற்கெல்லாம் கோபங் கொண்டு; நிமிடத்துக்கு நிமிடம் சிறியதோர் காரியத் திற்கு பெரிய சண்டை செய்துக்கொண்டிருந்தோரை ஒருவருக்கொருவர் விரோதியாக்கிக்கொள்வது தீயச்செய லுக்குறியனவாகும் எனக்கூறி, விஞ்ஞானக் கடலிலே நீந்திபோகச் செய்தார்களே அதுவேதான் அக்குழந்தை பெண்மக்களென்றால் நஞ்சைப்போல் பாவித்து, ஒன்று மறியாத பெண்சிசுக்களை உயிருடன் பாதாளகுழியில் தள்ளி புதைத்து வந்தோரை; பிற உயிரை கொல்வது மஹா பாபமாகும், கொல்பவர் தண்டனைக்குள் ஆக்கப் படுவார் எனக்கூறி இரக்கத்தோடு இரங்கச்செய்தார் களே அதுவேதான் அக்குழந்தை! இபுறாஹீம் நபி அவர்கள் எக்குழந்தை பிறக்க இறைவன்பால் பிரார்த் தனை புரிந்தார்களோ அதுவேதான் அக்குழந்தை ஈஸா நபி அவர்கள் தனக்குப் பிறகு எக்குழந்தை வரு வதின் சுபச்செய்தியை உலக மக்கட்கு கூறினார்களோ அதுவேதான் அக்குழந்தை! இப்பொழுது நமதுள்ளத் திலே இருதய கமலத்திலே அக்குழந்தையை அறிய அசையோடு ததும்பிக்கொண்டிருக்கிறதே அதுவேதான் அக்குழந்தை ரசூலே முஹம்மது (ஸல்) அவர்கள்.

நபி (ஸல்) அவர்கள் ஜனனமாகுமுன்னே அரேபிய நாடு அந்தகாரத்தில் மூழ்கிக்கிடந்தது. எங்கும் ஒரே

இருள். நாலுபக்கமும் அனுச்சாரமும், அட்டூழியமும்
ாண்டவமாடியது. அங்குள்ள மக்கள் கண்ட பெண்
ளையெல்லாம் காமலீலையாடி, பெண் குலத்தையே தன்
கச்சக்கரம் என நினைத்து வந்தார்கள். அந்த பாலைவன
க்கள் பெண் குழந்தை பிறப்பது பீடையெனக் கருதி,
ருகுற்றமும் புரியாத அப்பெண் சிசுக்களை பாதாள
ழியில் தள்ளி புதைத்து வந்தார்கள். காரணம்: நாம்
பெற்ற பெண்குழந்தை வளர்ந்து, பெரியதாகி, அடுத்த
னின் மடியில் ஆனந்தமாக புரண்டுகொண்டிருக்க
தை நாம் காணுவதா என்ற மமதை யுள்ளம் படைத்த
ர்களாக இருந்தார்கள். கள்ளா? அது ஆஹா! என்ன
ன்பமாய் இருக்கிறது கொண்டுவாருங்கள் குடங்குட
ாக எனக்கூறி குடித்து, அறிவை இழந்து வீணர்
ளாக திரிந்தார்கள், கண்டதெல்லாம் கடவுள் என்
றெண்ணி, அதன் முன் மண்டியிட்டு, மாலையிட்டு,
ணங்கி வந்தார்கள்.

இத்தகைய மானிடர்களை நோக்கி, அனுச்சாரச்
சயலிலே முன்னேறிச்செல்லும் மக்களை நோக்கி நம்
பி(ஸல்) அவர்கள் சொற்பொழிவு ஆற்றும்போது;
க தெய்வீகக் கொள்கையை எடுத்து இயம்பும்போது;
அங்குள்ள மக்களெல்லாம் யாரோ முஹம்மதுவாம், ஓர்
திய மார்க்கத்தை கொண்டு வந்துள்ளாராம், அதற்கு
முன்னோர்கள் வணங்கி வந்த புத்துக்களையெல்லாம்



விட்டு விட்டு அவரை ஒப்புக்கொண்டு ஆண்டவன்
வன் அவனைத்தான் வணங்கவேண்டும்'' எனக்
ஏளனம் செய்ய ஆரம்பித்தார்கள், இன்னும் அ
முஹம்மதுவை கொலை செய்துவிட வேண்டுமென கு
கள் அமைத்தார்கள். நாலு திசைகளிலும் ஈட்டி மு
கள் அவர்களின் மார்பை சுவைத்துப்பார்க்க முன்னே
நின்றன. இது மட்டுமல்ல, சமுதாயத்தை சீர்திருத்
செய்யப்புறப்பட்ட தலைவருக்கு கிடைத்த பட்டம் அ
யாயக்காரன், தலைமைபதவிக்கு ஆசைப்படும் பேரா
காரன். ஆனால், நபி(ஸல்) அவர்களோ திட்டுகிறார்க
என்று வருத்தப்படவில்லை, அடிக்க வருகிறார்களே என்
ஆத்திரப்படவில்லை. சகல கஷ்டத்தையும் அன்பு
வரவேற்று இஸ்லாமியபிரகாசத்தை எங்கும்பரவச்செ
வேண்டும். அதன் முரசு எங்கும் கொட்டப்படவேண்
என்ற ஒரு நோக்கத்தோடு, — ஒரே கொள்கையே
பாடுபட்டார்கள்.

## ஆரம்ப இஸ்லாம்!

நபி(ஸல்) அவர்களின் சொற்பொழிவு அங்குள்
மக்களின் செவிகளில்ஏறவில்லை. காரணம்: இப்பொழு
நம்மிடையே இல்லையா? கல் உள்ளம் படைத்தே

ரம் தினம் ஒவ்வொரு கன்னிப்பெண்ணுக கற்பழிக்க
தனே உலகிலே உலாவிக்கொண்டிருப்போர்! அவ்வாரே
காலத்து மக்கள் இருந்ததிஞல் . அவர்களின் செவி
ல் ஏறவில்லே. ஆரம்பமாக இஸ்லாம் கொண்டது
ற்ப ஜனங்களே. இருக்க-இருக்க இறக்க மில்லாத
பாலேவன மக்களின் செவிகளில் நபி(ஸல்) அவர்
ன் பொன்மொழிகள் சொட்ட-சொட்ட ஏற்றுக்
ண்டார்கள். கிளம்பிஞர்கள் இஸ்லாமிய ஜோதியை
கும்பரப்ப இருள் கவ்விய மக்கா நகரீலே இஸ்லாமிய
ாதி எங்கும் பரவ ஆரம்பித்தது.

நாளுக்கு நாள் இஸ்லாம் மதத்தில் ஜனங்கள் அதி
க்கவே, குப்பார்களின் இருதயத்தில் கோபம் பீரிட்
ழுந்தது. இஸ்லாத்தையே கூண்டோடு கைலாசம்
க வைக்க வேண்டுமென்றெண்ணி, இஸ்லாமியர்களே
கஷ்டங்களில் அல்லல்பட வைத்தார்கள். இந்த
த்திஞலேயே மிகுதியானவர்கள், அடிமை பீடத்தி
யே சிக்குண்டு கிடந்தவர்கள்: மறைமுகமாக ஈமான்
ண்டிருந்தார்கள். அவ்விதமாக ஈமான் கொண்டி
தவர்களில் பிலால்(ரலி) அவர்களும், இவர்கள் ஆரம்
தில் ஓர் காபீர் இடம் அடிமையாய் இருந்தார்கள்.

இஸ்லாமிய மார்க்கத்தை இவன் ஒப்புக்கொண்டு
டான் என்று எஜமான் அறிந்தவுடன் அந்த முஹம்



மதுக்கா ஈமான் கொண்டான் என்று தெரிந்தவு
கொடூரமான செயல் புரிந்தான் அந்த அடிமை
கழுத்திலே கயிற்றை கட்டி தெருதெருவாக இழு
வரச்செய்தான். பாலேவனத்திலே பச்சைத்தோலி
கட்டி உருளச்செய்தான். கொதிக்கும் பாராங்க
நெஞ்சில் வைத்து அலேமோதச்செய்தான்.
கஷ்டத்தை எல்லாம் அனுபவித்த பிலால்(ரலி) அ
களின் நாவிலிருந்து ஜொலித்தது 'அஹத்' 'அஹ
இறைவன் ஒருவன்; இறைவன் ஒருவன் என
வார்த்தையே.

இன்னும் அனேக முஸ்லீம்கள் விதவிதமான
டங்களே அனுபவிக்கிருர்கள். ஆனல், இவர்கள்
கஷ்டங்களே சகித்துக்கொண்டு போராடினது, மி
மானபொருள் கிடைக்கும், உயந்த பதவி கிடைக்
மக்களிடையே நமக்கு புகழ் கிடைக்கும். திடீர் பண
காரஞகலாம் என்பதற்காக அல்ல, அவர்கள் கொ
டுள்ள ஈமானின் உறுதியிஞல், இஸ்லாமிய ஜோதி
எங்கும் பரவச்செய்யவேண்டும் என்ற கொள்கையி
பாடுபட்டார்கள்.

அஃதொரு முறையிலே பாடுபட்டு, இஸ்லா
கொடியை தென்றலிலே பறக்கவிட்டதொரு இஸ்
மியக்கொடி; இன்று கரைகாணுக் கடலிலே கரைந்தே

டது, உண்மை முஸ்லீமாக, வீரதியாகிகளுக்காக
ழ்ந்தவர்களெல்லாம் இன்று எங்கோ மறைந்து
டார்கள். இன்று முஸ்லீம் சமுதாயத்தில் வாழும்
களை, முஸ்லீம் என்றழைக்க எந்தவொரு ஏட்டைப்
ட்டிப்பார்த்தாலும் முடியாதுபோல் தெரிகிறது.
ஸ்லீம் என்றழைக்கவோ மனம் துடிக்கிறது: நாவோ,
தைக்கண்டு ஏளனச்சிறிப்பு சிறிக்கின்றது! காரணம்
ன்று போர்களத்திலே சுகத்தை இழந்து, பொருள்,
வீ அனைத்தையும் இழந்து சிங்கம்போல் பாய்ந்து,
ஸ்லாத்துக்காக முன்வைத்த காலை பின் வைக்காமல்,
ஸ்லாத்திற்காக உயிர்தியாகம் புரிந்தார்களே அவர்
ல்லவா முஸ்லீம்கள். இன்று இஸ்லாமிய சின்னங்
கூட காணாமல் அழித்திட வேண்டும். என சிந்தனை
ல் லயித்துக்கொண்டிருக்கிறார்களே இவர்களா முஸ்
ம்கள்? அந்நிய மதஸ்தனிடத்தில் நமது மார்க்கத்தை
த்துரைத்து இஸ்லாமியக் கட்டிடத்தை பலப்படுத்
நக்க, அவனிடமே முஸ்லீம்கள் யார்? இவர்களா?
ற கேள்விக்கு இடம் கொடுத்திருக்கிறார்களே
வர்களா முஸ்லீம்கள்? இல்லவே இல்லை.

## ரீக உலகிலே உலவும் தோழர்களே! பெரியோர்களே!

முதலாளிக்குக் கட்டுப்படாத தொழிலாளி—அரச
க்கு அடிபணியாத குடிமக்கள் இவர்களை நாம்



2352

இவ்வுலகிலே உதாரணமாக எடுத்துக்கொண்டாலு
போதும். தொழிலாளி முதலாளிக்கு கட்டுப்படா வி
டால், அவனுக்கு அவன் தரும் பரிசு வேலை நிறுத்த
அரசனுக்கு குடிமக்கள் கட்டுப்படாவிட்டால், அவ
களுக்கு இரும்பு கம்பிகளை முத்தமிடும் தண்டனை. அ
வாரேதான் இறைவனுக்கும் நமக்குமிடையே எடுத்து
கொண்டாலும், அவனுக்கு நாம் கட்டுப்பட்டு நடந்தா
அவன் நமக்கு சொர்க்கத்தை பரிசாகத் தருவான்
அன்றி அவனின் உணவையே அருந்திவிட்டு, ஆண்
வன் என்றுகூடவா ஒருவன் இருக்கிறான்? உலக
திலே தோன்றி மறையக்கூடிய சகல வஸ்துவும் தா
கவே உற்பத்தியாகின்றன என்றல்லவா நான் வி
ஞான உலகிலே, நாகரீக உலகிலே தடுமாறிக்கொண்
ருந்தேன் என்று ஊதாரியைப்போல் கேள்விக
கேட்டால், அவன் தரும் பரிசு ஜுவாலை விட்டெறிய
கூடிய அக்கினிக்குன்றம். நம் சமுதாயத்தின் மக்க
அனுச்சாரச் செயலிலே முன்னேறிக்கொண்டிருக்கு
இக்காலத்திலே நம் கடமையை செய்யாமல், உறக
ஊஞ்சலிலே ஒய்யாரமாக இருந்தால், கொஞ்ச நஞ்
மிருக்கும் இஸ்லாமும் மறைந்துபோகும் என்பதில்
தேகமில்லை.

"இஸ்லாமியர்களே! வாளை எடுத்துக்கொண்டு இ
வும், பகலும் இஸ்லாத்துக்காக பாடுபடுங்கள், பல

Best copy available

ாரர்களே! உங்களின் பணங்களை வாரிவாரி, இஸ்லாத்துக்காக செலவு செய்துவிட்டு ஓட்டாண்டியாக போய்விடுங்கள்'' என்று கூறவில்லை இஸ்லாம்.

உயிரை உயிர் எனப் பாராமல், பசியை பசி எனப் பாராமல், இஸ்லாத்துக்காக பாடுபட்டு தழைத்தோங்கச் செய்தார்களே அந்தஒரு இஸ்லாமிய ஜோதியை மங்கச்செய்யாமல் மென்மேலும் அதிகரிக்க முயற்சி செய்யுங்கள் என்றுதான் இன்று ஒவ்வொரு முஸ்லீமுக்கும் எச்சரிக்கை செய்துக்கொண்டேயிருக்கிறது. செல்வம் படைக்கப் பட்டோர் நமக்கு ஏன் இறைவன் இவ்வுலகிலே செல்வத்தை கொடுத்திருக்கிருன், இவன் ஏழை, நாம் பணக்காரன் என்று பெருமை பாராட்டவா? அல்லது, சமத்துவம், சகோதரத்துவம் தாண்டவமாடும் நம் சமுதாயத்திலே வித்திபாசம் பாராட்டவா? அல்லது, நம்மதத்தில் ஏதாவது குறைகள் ஏற்பட்டால் அவைகளை நாம் சீர்படுத்த வேண்டும்; யாதொரு தீங்கும் நேராதபடி காப்பாற்ற வேண்டும் என்பதற்காகவா? என்று ஒவ்வொரு மோன்களும் பெருமை உலகிலே, ஒரு மெத்த கட்டடத்தை நாலாக செய்ய வேண்டும் என்ற சிந்தனையில் செல்லாதபடி, இஸ்லாத்துக்காக பாடுபட்டார்களேயானல் நம் முஸ்லீம் சமுதாயம் தழைத்தோங்குமென்பதில் ஐயமில்லை. எல்லாம் வல்ல இறைவன் அருள் புரிவாஞக.



# நில் தோழனே எங்கு செல்கிருய்? நி

நாம் எங்கே வந்தோம், ஏன் வந்தோம், எ மறந்துவிட்டு இப்பொழுது எங்கே தோழனே செ கிருய்? நில்! உன்பெயர் என்ன?

என்பெயரா? என்பெயர் அப்துல் கபூர்.

அருமையான பெயர். சரி! வா! போகலாம்.

எங்கே மதுபான மருந்தவா? அல்லது, காம கள் பல புரியவா? சொல்தோழனே! இதோ வருகிறே

இப்பொழுதுதானே உன்காதிற்கு பாங்கின் சப் தென்றலிலே தவழ்ந்தோடி வந்தது. அவ்வளவு சீக் மாகவா மறந்து விட்டாய்! பெண்கள் என்ருல் ஏனப் உலகத்தையே மறந்து விடுகிருய், இஸ்லாத்திலே மணமே செய்துக்கொள்ளக்கூடாது அப்படிச்செய் கொண்டாலும், அப்பெண்ணை விட்டுவிட்டு அன் மதங்களின் பெண்களை கையாளலாம் என்று திரும யிலே ஆகிய சட்டத்தை ஏதாவது கண்டாயா? செ தோழனே ஏன் மௌனம் சாதிக்கிருய்? இஸ்லாமெ ருல் வேப்பங்காய்போல் தோன்றுகிறதா நினைத் பார் தோழனே! அடிமைக்கூண்டிலே அடைப்ப

ந்த பிலால்(ரலி) அவர்கள் பாங்கின் மேடையிலேறி,
ங்கின் ஒலியை மக்களுக்கு அனுப்பிய உடனே இறை
னின் மீதுள்ள பயத்தினால், நபி(ஸல்) அவர்களின்
துள்ள நம்பிக்கையினால் இஸ்லாமிய வீரர்களாக,
யாகிகளாக, பள்ளிவாயலுக்கு விரைந்து வந்தார்களே!
தை மறந்து விட்டாயா? புதிதாக மணமுடித்த
பெண் சரியாக மணமுடித்து ஒருநாள்கூட ஆகாத
பெண்! தன் கணவனை மடியில் போட்டுக்கொண்டி
க்கும்போது தெருவிலே, யுத்தத்திற்குத் தயாராகுங்
ள் என்ற குரல் அப்பெண்ணின் செவியில் விழவே,
ண்ணீர் ஓடி கணவனின் முகத்தில் விழுந்தது.

விழவே திடுக்கென எழுந்து ஏன் அழுகிறாய்! திரு
ணம் ஆகி ஒருநாள் கூட ஆகாமலிருக்கும்போது
னக்கு நான் என்ன குற்றம் செய்தேன் என்று கண
ன் கூற; நான் அதற்காக அழவில்லை "போருக்கு தயா
ராகுங்கள்," என்ற குறலை கேட்டவுடன், அங்கே இஸ்
ாத்தை கருவருக்க வம்பர்கள் சூழ்ந்துக்கொண்டிருக்கும்
போது இங்கே நாம் உல்லாச வாழ்க்கையில் இருக்கி
றோமே என்ற கவலையினால் என் கண்களில் கண்ணீர்
டினது என அப்பெண் கூறி, சட்டென எழுந்து கண
ன் கையில் வாள் எடுத்துக்கொடுத்து; வீரராக
திரும்பி வந்தால் நீர் என் கணவர், உயிருக்கு பயந்து
கோழைபோல் புறமுதுகுகாட்டி ஓடி வந்தால் நீர் என்



கணவரல்ல, எனக்கூறி அனுப்பியவுடன் சிங்கம்போ
பாய்ந்து எதிரிகளை பலரைக்கொன்று போர்க்களத்
லேயே இஸ்லாத்துக்காக உயிர் இழந்ததை பார்
வில்லையா? பார் தோழனே பார்! பள்ளிகளை எதற்க
கட்டப்பட்டதோ அதை அங்கு காணப்படுகிறதா என்
பார்! பள்ளிகள் உலுத்துக்கொட்டுவதைப்பார்! பற
களும், வௌவால்களும் யாரிடமும் உத்தரவு பெ
மலே பள்ளியினுள் சொந்தங் கொண்டாடுவதைப்ப
மேடையிலே இஸ்லாத்தைப்பற்றி தூவிப்ப
பேசும் சண்டாளர்களைப்பார்! ஏன் தோழனே இன்னு
விழிக்கிறாய்? இன்னும் கண்களை திறக்காமலே மூ
கொண்டிருப்போம் என்று நினைக்கிறாயா? இஸ்லாத்
அழித்துக்கொண்டிருப்போம், என்று சிந்தனைக்
லிலே நீந்திக்கொண்டிருக்கிறாயா? அல்லது, குருப
கேள்விகளைக்கேட்டு மடமை கூடத்திலே நீ ஒரு ப
ஏற்க ஆசிக்கிறாயா? சொல் தோழனே சொல்! சரி
இது? உனக்கு நேர்மைதானா?

போதும் உமது அறிவுரைகளை நிறுத்து தோழ
இருளடைந்து கிடந்த எனது அறிவிலே பிரகாசத்தை
பெறச்செய்த உனக்கு இறைவன் நல்லருள் புரிவா
வா! தோழனே போவோம், இஸ்லாத்தை புழுப்பே
அரித்துக்கொண்டிருக்கும் வேஷக்காரர்களை திரு
வோம்.

மக்கட்கு நான் தலைவன், நான் இந்த ஊர் நாட்
ண்மைக்காரர் எனக்கூறிக்கொண்டு எந்த முறையில
கட்கு நல்லறிவு புகுத்தவேண்டும், என்ன சேவைகள
ய்யவேண்டும். இஸ்லாத்தை எப்படி வளர்க்கவேண்
ம் என்று கொஞ்சங்கூட கவலையில்லாமல் வேறு
றைக்கு தலைமை பதவியில் வீற்றிருக்கிறார்களே அவ
ள திருத்துவோம் புறப்படு தோழனே புறப்படு, நாம்
வ்வொருவரும் உண்மை முஸ்லீமாக, முஸ்லீம்கள் யார்
வர்களா என்ற கேள்விக்கு இடம் கொடுக்காமல்
ண்மை வீரர்களாக, உண்மை தியாகிகளாக, இறை
னிடம் நல்லடியானாக, நம் நபி(ஸல்) அவர்கட்கு ந
ம்மத்துகளாக வாழவேண்டுமானால் இஸ்லாத்து
கப் பாடுபடவேண்டும், அப்படி நாம் ஒவ்வொருவரு
டுபட்டால், சோர்ந்து கிடக்கும் இஸ்லாமிய
காடியை மீண்டும் தென்றலிலே பறக்கவிடலாமென
தில் ஐயமில்லை. நாம் இஸ்லாத்துக்காக பாடுபடுவே
ாக! நம் அனைவருக்கும் இறைவன் நல்லருள் பு
ாறுக!

வளர்க இஸ்லாம்! ஓங்குக சமத்துவம்!!

அப்துர்ரஹீம்,
சென்னை அ.
ஈத்தளிக்கும் இதம்
கோட்டைக்குப்பம், [195-?]

Record no. 80847

*Apturrahīm, Ceṉṉai A.*

*Īttaḷikkum itam*

*Kōṭṭaikkuppam, [195-?]*

Record no. 80847

Bibliographic Record Target

*அப்துர்ரஹீம், சென்னை அ.*
*ஈத்தளிக்கும் இதம். -- கோட்டைக்குப்பம் : இஷாஅதுல் இஸ்லாம் மாணவர் குழு, [195-?]*
*6 p. ; 13 cm.*
*Record no. 80847*

*Apturrahīm, Cennai A.*
*Īttaḷikkum itam. -- Kōṭṭaikkuppam : Iśāatul Islām Māṇavar Kuḻu, [195-?]*
*6 p. ; 13 cm.*
*Record no. 80847*

அல் இஸ்லாம்  ஜிந்தாபாத்

# சத்தளிக்கும் இதம்




சென்னை அ. அபதுர்ரஹீம் II B. A.

இஷாஅதுல் இஸ்லாம் மாணவர் குழு,
காஜியார் வீதி, கோட்டைக்குப்பம்.

வெளியீடு வரிசை 7. இலவசப் பிரசுரம்.

# ஈத்தளிக்கும் இதம்



நீரிலே இட்ட நெய்போல இஸ்லாம் உலகில் பரவியது
ற்றெந்த மதமும் இத்துணை விரைவாக பரவவில்லை
ன்பதை யாரும் மறுக்க மாட்டார். ஏன் இஸ்லாம் இவ்வளவு
விரைவாக பரவ வேண்டும்? என்ற கேள்வியை மேலை
ாடுகளில் பிறமத அறிஞர்கள் எழுப்பினர்கள். நல்லெண்
ணங் கொண்டவர்களுக்கு இஸ்லாத்தின் பெருமைச்சட்டெ
ாப்புரிந்துவிட்டது பெருமையை உணர்ந்த பெருமக்கள்
இஸ்லாத்தைத்தழுவினர்கள் இஸ்லாம் மேன்மேலும் வளர்ந்
துது; வளர்கின்றது.

பொறாமைக்கொண்ட புல்லர்கள் சிலர் புறப்பட்டனர்
இஸ்லாம் வாளால் பரப்பப்பட்டது" என்றார்கள்.

ஆமாம்! உண்மை இஸ்லாம் வாளால்தான் பரப்ப
ட்டது, மறுக்கவில்லை! மறைக்கவும் மாட்டோம்!

ஆனல் அந்தவாள் எந்த வாள் தெரியுமா? அதுதான்
ஏகத்துவம்" என்ற கூர்வாள். இந்த வாள் கொண்டுதான்
இஸ்லாம் பரப்பப்பட்டது! இந்த வாளுக்கு உள்ளத்தையும்
டலையும் பறிகொடுத்தோர் எண்ணிக்கை ஏராளம்தான்!





இஸ்லாம் கூறும் இறவாக் கொள்கைகளில் முதன்மை
யானது, "இறைவன் ஒருவன், உருவற்றவன்; வணக்கத்தி
குரியவன்" என்பது.

ஓரினம் குறைந்த காலத்தில் சிறந்து வளரவேண்
மானல் அந்த இனத்தில் ஒற்றுமை ஓங்க வேண்டு
ஒற்றுமை ஓங்க வேண்டுமாயின் அவ்வினம் பின் பற்று
மதம் சீருடையதாக இருக்கவேண்டும். மதம் சீருடையதா
இருக்க வேண்டுமாயின் அம்மதத்தில் ஒற்றுமையை வளர்
தக்க இறவாத கொள்கைகள் இருக்கவேண்டும்.

இஸ்லாம் செழித்து வளர அதனிடம் உள்ள தரங்குறை
யாக் கொள்கைகள்தான் காரணம். அக் கொள்கைகளி
முதன்மையானதுதான் ஏகத்துவம் இறைவன் ஒருவ
என்ற உணர்ச்சியே மதப் பூசல்களையும், சாதி வெறிகளையு
கொடுமைகளையும் வேரறுக்க வல்லது ஓரினத்தினரை ஒன்
சேர்த்து ஒரு நாட்டிற்கும், மற்றைய இனத்தினருக்கு
எடுத்துக்காட்டாகி வைப்பதுவும் ஏகத்துவம்தான்.

நம்மில் சாதிப் பிரிவுகள் இல்லை சமயப் போராட்டங்க
நாம் அறியோம் நம்மிடம் உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்
வேற்றுமைகள் இல்லை. அல்லாஹ்வின் படைப்புகள் அ

தும் உயர்ந்தவையே என்ற கொள்கையினர் நாம் ஏகத்துவம் என்ற வாளைக்கொண்டுதான் நம்முன்னோர் நாளுக்கொரு தெய்வம் என்ற நம்பிக்கைக் கேட்டை வெட்டினார்கள். உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்ற ஊதாரிப்போக்கை ஒழித்தார்கள். சாதிப் பிரிவெனும் சழக்கையும் குலப்பெருமையெனும் கர்வத்தையும் சிதைத்தார்கள். பண்பட்ட நிலத்தில் இஸ்லாத்தின் கோட்டையைக் கட்டினார்கள். வானுயர வளர்ந்தது வளர்கின்றது.

ஆன்மீகத்தில் மட்டும் அக்கறைக் காட்டிவிட்டு உலகியலை மறந்துவிடவில்லை இஸ்லாம். நம் சமுதாயம் செழித்தோங்க தேவையான சமுக, பொருளாதாரா திட்டங்களும் வரை முறைகளும் திருகுர்-ஆனில் மிளிர்ந்து கொண்டிருக்கின்றன திருநபியின் வாழ்வும் வாக்கும் இஸ்லாத்தின் நரம்பும் நாடியுமாக விளங்குகின்றன.

இஸ்லாம் கூறும் சமத்துவம், தொழுகையிலே தோளோடு தோள் நிற்கும் பான்மை உலக சகோதரத்துவத்திற்குச் சிகரமாய் விளங்குவது. பெண்கள் அடிமை யெனும் பேதமை இஸ்லாத்தில் இல்லை.



இறைவனுக்குச் செலுத்தவேண்டிய கடமை மனிதனுக்குச் செய்யவேண்டிய நன்றி இவ்விரண்டும் இஸ்லாத்தின் இரு கண்கள். "எவனொருவன் தன்னுடைய சகோதரனின் உரிமைகளை பறிக்கின்றானோ, அவன் இறைவனின் ஏகத்துவத்தின் மீது நம்பிக்கையற்றவனாக இருக்கின்றான்" எனும் மாநபியின் மணிமொழி மீது நம்பிக்கை கொண்டவர்கள் நாம்.

இஸ்லாம் வாளால் பரப்பப்பட்டது என்று கூறும் புல்லறிவாளர்களுக்கும், அதை நம்பு நகைப்புக்குரியவர்களுக்கும் இவ்வுண்மையை உணர்த்தவேண்டும் அவர்களும் இதை உண வேண்டும். இதுவே நமது வேணவா.

எம் மதமும் அதனைப் பின் பற்றுகின்றவர்களைக் கொண்டே மதிப்பிடப்படுகின்றது ஆதலால் நம்முடைய மதத்தில் சீரும் சிறப்பும் நிறைந்திருக்கின்றது என்று உலகுக்கு உணர்த்தவேண்டுமானால் அதற்குரிய பொறுப்பு நம்மிடமிருக்கின்ற

சல்வம் படைத்த சீமான்கள் ஏழ்மையில் உழலும்
ங்கள் உடன் பிறப்புகளை ஆண்டுக்கொரு முறை
ிழித்துப் பார்த்தால் போதாது தினந்தினம்
அன்புக் காட்டி ஆதரிக்க வேண்டும் முஸ்லிம்கள்
தத்தில் மட்டும் சகோதரர்கள் அல்ல சமுதாயத்
திலும் பொருளாதாரத்திலும் சகோதரர்களே என்ற
ண்மையை வளர்த்து ஒற்றுமை ஓங்கச் செய்து
ம் இனத்தை உயர்த்த வேண்டும் அப்போது
ன்ஈத் இதமளிக்கும் இஸ்லாம் வளரும் முஸ்லிம்
ள் உயர்வர்,

இம்மையிலேயே மறுமைக்கு வித்திடுகின்றோம்
னவே இங்கு நன்மையான வைகளைச்செய்யுங்கள்
ங்கு நற்பயனடைவீர்கள்.

— நாயகம் திருமேனி.



# ஈத் வாழ்த்து

புங்கை சித்தீக் அலீ

சிந்திக்கத் தித்திக்கும்
தீன்மறையின் தேன்கூட்டை
சிந்தைக்கு விருந்திட்ட
சீரிறைக்குப் புகழனைத்தும்!

எளியோரின் பசியுணர்த்தும்
ஏற்றமதாம் நோன்புவைத்தே
எளியோர்க்கே இன்முகமாய்
இரங்குவதே நலமாகும்!

ஈகையைநல் உருவாக்கி
எங்கெங்குந் திருவாக்கி
வாகைசூட்டும்; மாண்பூட்டும்;
வாழ்வூட்டும் பெருநாளாம்!

ஈத்பணியாய், இஷாஅத்தில்
இஸ்லாம்நல் மாணாக்கர்
ஈத்தளிக்கும் இதமென்ற
இவ்வேட்டை தருகின்றோம்!

# நீடூர்-நெய்வாசல் மத்ரஸா மிஸ்பாஹுல் ஹுதா வின் 1947-ம் வருட ஜனவரி ஆரம்ப முதல் டிசம்பர் முடிய வரவு-செலவு ரிப்போர்ட்

மாயவரம், 1948

Record no. 80858

*Niṭūr-Neyvācal Matrasā mispāhūl sūtā vi<u>n</u> 1947-m varuṭa Ja<u>n</u>avari ārampa mutal Ṭicampar muṭiya varavu-celavu rippōrṭ Māyavaram, 1948*

Record no. 80858

Bibliographic Record Target

*நீடூர்-நெய்வாசல் மத்ரஸா மிஸ்பாஹுல் ஸூதா வின் 1947-ம் வருட ஜனவரி ஆரம்ப முதல் டிசம்பர் முடிய வரவு-செலவு ரிப்போர்ட் : காப்பு-வெண்பா. -- மாயவரம் : ஸ்ரீ ராகவன் அச்சகம், 1948.*
*[ii], 38, [2] p. ; 20 cm.*
*Record no. 80858*

*Nīṭūr-Neyvācal Matrasā mispāhūl sūtā vin̲ 1947-m varuṭa Jan̲avari ārampa mutal Ṭicampar muṭiya varavu-celavu rippōrṭ : kāppu-veṇpā. -- Māyavaram : Śrī Rākavan̲ Accakam, 1948.*
*[ii], 38, [2] p. ; 20 cm.*
*Record no. 80858*



நீடூர்-நெய்வாசல்,

# "மத்ரஸா மிஸ்பாஹுல் ஹுதா"வின்

1947-ம் வருட ஜனவரி ஆரம்ப முதல் டிசம்பர் முடிய

வரவு-செலவு

# 'ரிப்போர்ட்'



**காப்பு-வெண்பா.**

---

வேதமறை யுட்பொருளை பேதமற போதிக்கும்
நாதனருள் "நேர்வழியின் தீபம்"—மாதவத்தின்
வித்தென்கோ! சுத்தநபி சித்தென்கோ! வத்துவித
கத்தனருட் கற்பிதமே காப்பு.



மத்ரஸாவின் 'நாஸிர்'

ஹாஜி, N. P. முகம்மது இப்ராஹீம் சாஹிப் (பாகவி) அவர்களால்

மாயவரம்,

ஸ்ரீ ராகவன் அச்சகத்தில் உருவாக்கப்பெற்றது

1948



# நீடூர்-நெய்வாசல்,

# "மத்ரஸா மிஸ்பாஹுல் ஹுதா"வின்

## 1947-ம் வருட ஜனவரி ஆரம்ப முதல் டிசம்பர் முடிய

## வரவு-செலவு

# 'ரிப்போர்ட்'



*"ஏ, 'ரிப்போர்ட்' செல்வமே! நினது அதி தீவிரப் பிரயாண நோக்கம் யாது?"*

*"நீடூர்-நெய்வாசலில் துலங்கும் 'நேர்வழி தீப'மாம் மத்ரஸா "மிஸ்பாஹுல் ஹுதா"வென்னும், கலாபவன 'கற்பக விருக்ஷ'த்தின், திவ்ய மதுர தெய்வலோகக் கனியமுதை, அதன் அந்தரங்க போஷக பிதாக்களான பெருங் 'கொடை வள்ளல்' களிடம் சமர்ப்பித்து, அவர்களது நண்பர்களின் பேரன்பையும் பெற்று வரவே விரைந்து செல்கின்றேன்."*

"செயற்கரிய செய்வர் பெரியார் — சிறியர்
செயற்கரிய செய்கலாதார்." —குறள்.



மத்ரஸாவின் 'நாஸிர்'

ஹாஜி, N. P. முகம்மது இப்ராஹீம் சாஹிப் (பாகவி) அவர்களால்

மாயவரம்,

ஸ்ரீ ராகவன் அச்சகத்தில் உருவாக்கப்பட்டது.

1948

# பொருளடக்கம்.





# முன்னுரை.

—✻—

**பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்.**

அல்ஹம்துலில்லாஹிரப்பில் ஆலமீன் சர்வ புகழும் புகழ்ச்சியும் சகல படைப்பினங்களுக்கும் ஏக சக்ராதிபதியாகிய ஹக்குசுப்ஹானஹூவதஆலா ஒருவனுக்கே உரியதாக இருக்கும். அவன்தான் நாடியதை தன் அடியார்களுக்கு நிறைவேற்றித் தருபவன். அவ்வல்லோனின் அருள்நெறி வாயிலாய் அவதரித்த கருணை வள்ளல் மகான் **முகம்மது முஸ்தபா** (ஸல்) அவர்களுக்கும் அவர்களின் கிளையார்கட்கும் இறைவனின் அனுக்கிரகமும் ஆசீர்வாதமும் உரித்தாகுக.

இஸ்லாமிய சமூக மதாபிமானிகளே ! இக்கால உலக நிலைமையை உற்றுநோக்குமிடத்து உலகாபிவிருத்திக்கான இலௌகீக உத்வேகம் எத்தனை முற்போக்கடைந்து இஸ்லாமிய மக்களின் உள்ளத்தைக் கொள்ளைகொண்டிருக்கிறதென்பதைப் பிரத்தியட்சமாக நன்கு தெரிந்துகொள்ளலாம் ஆனால். மதக்கொள்கையுடையவும் அதைப் போதிக்கும் கலாசாலைகளினுடையவும் நிலைமையைச் சிந்தித்துச் சீர்தூக்கிப் பார்க்கின் மதாபிமானம் பூண்ட எந்த முஸ்லிமும் இரத்தக் கண்ணீர் வடிக்காமலிருக்கமுடியாது. ஏனெனின் மதக்கல்வி கற்பது ஒவ்வொரு இஸ்லாமியனுக்கும் கட்டாயக் கடமையாகும் என்றும், அக்கல்வியானது இஸ்லாத்தின் தூணாகவும், பிரார்த்தனை (தொழுகை)யைக்காட்டினும் மிகவும் சிரேஷ்டமானதென்றும், நமது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறிப்போந்தார்கள். மதக் கல்வியைப்பற்றி இத்தனை தூரம் வலியுறுத்திக் கூறப்பெற்ற மதத்தினராகிய நாம், ஏன் சகல விஷயங்களிலும் பிற மதத்தினரைவிட மிகவும் பின்னணியில் நிற்கின்றோமென்பதை நம் மக்கள் நன்ருகச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். இவை யாவும் நாம் நமது மதக்கல்வியில் போதிய கவனம் செலுத்தாததன் காரணமன்றே ?

பகுத்தறிவாளர்களே! தற்கால இத்தகைய மகத்துவம் பொருந்திய மதக் கல்வியைக் கற்று அதன்படி யொழுகிவரும் உண்மை உலமாக்கள் நாளுக்குநாள் குறைந்துகொண்டே வருகிறார்கள். இந்நிலையை

நிவர்த்திக்கும்பொருட்டு, நமது வேலூர் மத்ரஸா 'பாக்கியாதுஸ்ஸாலிஹாத்'' தின் பக்க பலமாக, மாயவரம் தாலூகா நீடூர் - நெய்வாசலில் 1912-ம் வருஷம் (மர்ஹூம்) மௌலானா மௌலவி, அல்ஹாஜ் அப்துல், கரீம் ஹஜ்ரத் அவர்களால் எவ்வித மூலதனமுமின்றி ''மிஸ்பாஹுல் ஹுதா'' வென்னும் அழகிய திருநாமத்துடன் அரபி மத்ரஸா வொன்று ஸ்தாபிக்கப்பெற்று பல உள்ளூர், வெளியூர் தர்மவான்களின் பேருதவியால் நாளுக்கு நாள் அபிவிருத்தியடைந்து இன்று 36 வருடங்கள் பூர்த்தியாகி இருக்கிறது. இம்மத்ரஸாவில் தற்சமயம் தக்க ஆசிரியர்களைக் கொண்டு 135 வெளியூர் மாணவர் (தாலிபுல் இல்ம்) களுக்கு உணவுடன், அரபி, உர்து, பார்சி, ஆங்கிலம், தமிழ் முதலிய ஐந்து பாஷைகளும் போதிக்கப்பட்டு வருகிறது. மேலும் உள்ளூர் பிள்ளைகள் 250 பேருக்கு ஆரம்ப - குர்ஆன் போதிக்கப்படு கிறது. அத்துடன் நமது இந்திய அரசாங்கத்தின் எதிர்காலத் திட்டப்படி இராஜாங்க பாஷையாகிய ஹிந்தியும் ஆரம்பிக்கப் பெற்றிருக் கிறது

நமது முஸ்லிம் சமூகம் மதக் கல்வி விஷயத்தில் மிக மிக பிற்போக்கடைந்து நிற்கும் இத்தருணத்தில் நம் தென்னாட்டில் மதக் கல்வி ஸ்தாபனத்தின் அவசியத்தை உணர்ந்து, அதை முழு மனதுடன் ஆதரித்து முற்போக்கடையச்செய்யவேண்டியது ஒவ்வொரு முஸ்லிம் ஆண் – பெண்களின்மீதும தவிர்க்கமுடியாத கடமையாகு மென்பதை ஞாபகமூட்டுகின்றோம். இம் மத்ரஸா ''மிஸ்பாஹுல் ஹுதா'' வானது இவ்வளவு பெரிய அந்தஸ்தையடையப்பெற்றது. இறைவனின் கருணையாலும் பொதுமக்களின் போராதரவினாலுமே யாகும்.

இறைவன்மீது மாறாத விசுவாசமுள்ள சகோதர சகோதரிகளுக்கு ஓர் வேண்டுகோள்.

---

விசுவாசிகளே! நம் மத்ரஸாவுக்குப் போதிய ஸ்தாவர சொத்துக்களின் வருவாயின்றியே மாதாமாதம் சந்தா வசூல் செய்து நடத்தி வருகிறோம். இவ்வாறு மாதச் சந்தா தொகைகளையே நம்பி இவ்வளவு பெரிய ஸ்தாபனத்தை நடாத்தி வருவது சிரமமென்ப



தையும், இந்த 'ரிப்போர்ட்' புத்தகத்தைக் கண்ணுறும் புண்ணியவான்கள் இதன் மாதச்சிலவு சுமார் ரூ. 1500-வரையில் ஆகிறபடியால் அவரவர்களும் தங்களாலியன்ற அளவு தாராள மனத்துடன் இப்பெருங் குறையை நிவர்த்திக்க நல்லுதவி புரிந்தருளும்படி கேட்டுக் கொள்ளுகின்றோம்.

இங்ஙனம்,

**ஹாஜி, S. E. அப்துல்காதர் சாஹிப்,**
மானேஜர்.

---

# முக்கிய அறிவிப்பு.

—❀—

அன்பர்களே !

இம்மத்ரஸா "மிஸ்பாஹுல் ஹுதா" வானது முன்னுரையில் கூறியபடி 1912-ல் ஸ்தாபிக்கப்பெற்றதென்பதும், புகழுக்குரிய இப்பெருங் கைங்கர்யத்தை ஆர்வமுடன் நிறைவேற்றிய பெருமை, நமது அஃலா ஹஜ்ரத்; அல் – உஸ்தாது, கல்விக் களஞ்சியம், மௌலானா மௌலவி அல்ஹாஜ், அ. அப்துல்கரீம் சாஹிப் ஆரிபுபில்லாஹ் (குத்திஸஸிர்ரஹு) அவர்களுக்கே உரியதென்பதும் நாமனைவரும் அறிந்த விஷயமே.

நான்கணா மூலதனம் ஒரே உஸ்தாது சில மாணவர்கள், இவைகளுடன் அமைக்கப்பெற்ற இம்மத்ரஸாவானது இன்று அகில ரக்ஷகனான அல்லாஹ்வின் பேருதவியாலும் மெய்யன்பர்களின் பேருதவியினாலும், சற்றேறக்குறைய 135 மாணாக்கர்கள் 8-உஸ்தாதுகள் இரு ஆங்கில வகுப்பு ஆசிரியர்கள், 18 இதர உத்தியோகஸ்தர்களுடனும், கம்பீரமாக காட்சியளிக்கிறது. (அல்லாஹ்வுக்கே சர்வபுகழும்) மாணவர்களின் உணவுச்சிலவு, உத்தியோகஸ்தர்களின் சம்பளம் இவற்றுடன் தற்போது மத்ரஸாவுக்கு மாதம் 1-க்கு சுமார் ரூ. 1500 வரை செலவாகின்றது. மாணவர்கட்கு இருப்பிடம், உணவு, கல்வி இவையாவும் இலவசமாகவே அளிக்கப்படுகிறது.

ஸ்தாவரச்சொத்துக்களின் இவ்வருட வருமானம் ரூ. 5402-14-3 போக துண்டு விழும் தொகையை மார்க்கபக்தர்கள் அன்புடன் அளித்துவரும் மாதச்சந்தா, நன்கொடை, நேர்ச்சை முதலியவைகளைக் கொண்டே ஈடு செய்யப்படுகிறது. பொருளாதார நெருக்கடி மிகுந்த இக்காலத்தில் இத்தனைப்பெரிய செலவினங்களை மேற்கூறிய வாறு சாதாரண சிறுசிறு வருமானங்களைக்கொண்டு சரி செய்து வருவதானது எத்தனைச் சிக்கலான விஷயமென்பதை யாவரும் அறிதல் தெளிவு. எத்தகைய நெருக்கடியையும் புன்முறுவலுடன் சமாளித்துச் செல்லும் பேராற்றலை எமக்களித்த இறைவனின் பெருமை தானென்னே !



கல்வியின் அவசியத்தையும், நிலைமையின் தேவையையும் நன்றாக மனத்திற்கொண்டு இதைக்கண்ணுறும் கனவான்களும், சகோதரிகளும் தாராளமாகப் பொருளுதவி புரியும்படியும், தங்கள் பந்து மித்திரர்களையும் இப்புண்ணிய கைங்கர்யத்தில் பங்கு கொள்ளுமாறு தூண்டும்படியும் விநயமாகக் கேட்டுக்கொள்கின்றோம்.

உலகையே உய்விக்கவந்த உத்தம நெறியாகிய இஸ்லாத்தின் கல்வியை அபிவிருத்தி செய்வதற்கு ஆதரவளிப்பதன்மூலம் இறைவனை திருப்தி செய்வது என்பது நமது "ஈமா" னிலேயே ஊறிப்போன விஷயமாகும். இதுபற்றி ஒரு சில உதாரணங்கள் எடுத்துக்கூறுவது பொருந்துமென்று நினைக்கின்றோம்.

"மதீனா" முனவ்வராவின் "மஸ்ஜி" தெ'நபவிய்யி' யில் ஒரு திண்ணை இருக்கிறது. இஸ்லாத்தின் ஆரம்பகாலத்தில், அரப் நாட்டின் பல பாகங்களிலிருந்தும், ஏராளமான முஸ்லிம்கள் அங்கு வந்து கொண்டிருந்தனர். அத்திண்ணையிலேயே தங்கியிருந்து கல்வியின் இன்பத்தைப் பூர்ணமாக அடைந்தவர்களுள், ஹஜ்ரத், அபூஹுரைரா (ரலி) அவர்களுமொருவராவர். இப்பெரியார் இரண்டாயிரத்திற்கதிகமான, நாயக நன்மொழிகளாகிய 'ஹதீது' களை அறிந்திருந்தார்கள். இத்தனை 'ஹதீது' களையும் அப்பெரியார், மேற்கூறிய திண்ணையில் இருந்துதான் கற்றுக்கொண்டார்கள். அபூஹுரைரா (ரலி) அவர்களைப் போன்றே பெரு மதிப்பும் பரிசுத்தமும் பொருந்திய 400-சஹாபாக்கள்வரை அத்திண்ணையிலேயே தங்கியிருந்து கலைச்செல்வத்தைப்பெற்றிருக்கிறார்கள். எம்பெருமான் (ஸல்) அவர்களின் மேற்பார்வையில் இந்த 'சஹாபா' க்களின் உணவு, உடை முதலிய தேவைகளை நமது சகோதரர்களாகிய 'மதீனா' வாசிகள் தான் கவனித்து வந்திருக்கிறார்கள் என்று பூர்வ கிரந்தங்களால் தெரியவருகிறது.

நபியுல்லாஹ் (ஸல்) அவர்களின் அருள்மொழிகளாகிய 'ஹதீது' களில் பெரும்பகுதி இத்திண்ணை மாணவர்களால்தான் நமக்குக் கிடைத்திருக்கிறது. இவ்வாறாக ஆரம்பகால முஸ்லிம்கள் இஸ்லாமிய கல்வியைப் போற்றி பாதுகாத்து நம்மிடம் ஒப்படைத்திருக்கிறார்கள். பெருமைக்குரிய அந்த ஆரம்பத் திண்ணைப் பள்ளிக்கூடத்தை இப்போது நாம் எங்கே காணலாம் ? அதுதான், தானாகவே வளர்ந்து

பூத்து, காய்த்து, கனிந்து குலுங்கிய கலை விருக்ஷங்களாக (மத்ரஸாக்களாக) உலகெங்கும் மிளிர்கின்றது. ஆகையால் எமதருமைச் சகோதர சகோதரிகளே! நமது வீர சிகாமணிகளாகிய 'மதினா' வாசிகள் நமது கலைவிருக்ஷத்தை வளர்க்க ஆக்கமளித்ததுபோலவே நாமும் நம்மால் சாத்தியமான வகைகளாலெல்லாம் தொண்டாற்றுவோமாக!

இஸ்லாத்திற்கு தீபமாகிய கல்வி இல்லையேல், இஸ்லாமியர்களாகிய நாம் எவ்வாறிருப்போமென்பதைச் சிந்தித்துப் பாருங்கள். கல்விதான் நமக்கு ஜீவன்; கல்வி யில்லையேல் நாம் இருந்தும் இல்லாதவர்களேயாவோம். நாமனைவரும் இயன்றவரையில் மதக்கல்வியைப் பயில வேண்டும். இது சாத்தியமில்லாவிடின் கற்பவர்கட்கு ஆதரவாகவாவது நம்மாலியன்ற உதவிகளைச் செய்யவேண்டும். இவையிரண்டுமற்ற ஜீவியம் பிரயோஜனமற்றதென்பதில் சந்தேகமுண்டோ?

ஆகையால், கனவான்களே! இஸ்லாமிய கல்வி வளர்ச்சிக்கு உங்களாலான எல்லா வகையான உதவிகளையும் புரியத் தயங்காதீர்கள். நெருக்கடி மிக்க இக்காலத்தில் ஒரு பெருந்தொகையான செலவினங்களை, எதிர்பார்க்கும் வருமானங்களான சந்தா வசூல், நேர்ச்சை முதலிய சர்வ சாதாரணமான வருவாயைக்கொண்டே நிறைவேற்றி வருவது எவ்வளவு சிரமமான காரியமென்பதை நன்றாகச் சிந்தித்துப் பாருங்கள்.

இறைவனருளால் இன்றுவரை நெருக்கடியைச் சமாளித்துவரும் இதன் நிர்வாகிகளுக்கு இனியேனும் சற்று சிரமம் குறையும்படி, இம்மத்ரஸாவின் ஸ்தாவரச் சொத்துக்களை ஓரளவு பெருக்குவதற்கு ஒவ்வொருவரும் தாராள மனத்துடன் ஆதரவு காண்பித்துப் பொருளுதவி செய்யும்படி கேட்டுக்கொள்கின்றோம். "நலவுக்கும்; பயபக்திக்கும் ஆதரவு கொடுங்கள்" — அல்குர்ஆன்.

அன்பர்களே! இம் முகவுரையை முடிக்குமுன் மற்றொரு முக்கியமான விஷயத்தைப்பற்றியும் சற்று விளக்குவது அவசியமென்று நினைக்கின்றோம். இம் மத்ரஸாவின் பழைய கட்டிடம் இடவசதி மிக குறைவாக இருந்தமையால், மேற்கொண்டு சுமார் ரூ. 50,000 செலவில் கட்டிடத்தை விஸ்தரிக்கும் திருப்பணி துவக்கப்பட்டு இன்று



முடிவுறுந்தறுவாயிலிருந்து வருகிறது. அதற்கு பல கனவான்களும், பல சீமாட்டிகளும் பொருளுதவி செய்திருக்கிறார்கள். இப்பெருந்தகையாளர்களுக்கு இம்மத்ரஸாவின் நிர்வாகிகளான நாங்கள், எங்கள் மனப்பூர்வமான நன்றியறிதலைச் சமர்ப்பித்துக் கொள்கின்றோம். இக்கட்டிடவேலை பூர்த்தியானபின் அதன் 'ரிப்போர்ட்' பிரசுரமாகும்போது முழு விபரமும் வெளிவரும்.

இறுதியாக, இம் மத்ரஸாவை முன்னேற்றமான முறையில் வெற்றிகரமாக நடாத்திச்செல்ல இதற்குப் போதிய ஸ்தாவர சொத்துக்களை அருளும்படி எல்லாம்வல்ல இறைவனிடம் வேண்டுதல்புரிந்து இதற்குச் சந்தா—நன்கொடை—நேர்ச்சை முதலியவைகளளித்து ஆதரித்துவரும் வள்ளல்கள், மத்ரஸா விஸ்தரிப்புக் கட்டிடத்திற்காகப் பொருளுதவி புரிந்தருளிய புண்ணியசீலர்கள் மற்றும் எல்லா வகையிலும் இதன் முன்னேற்றத்திற்காக உழைத்த உத்தமர்கள் யாவருக்கும் இகபரமிரண்டிலும் பேரும் புகழும் அளித்தருளுமாறு அல்லாஹ்விடம் கரமேந்தியவர்களாக இம்முகவுரையை முடித்துக்கொள்கின்றோம்.

இங்ஙனம்: பிரின்ஸிபல்,

**மௌலவி, ஹாஜி, N. P. முகம்மது இப்ராஹிம் சாஹிப்,**

## மத்ரஸா "மிஸ்பாஹுல் ஹுதா" வின் மகிமை.

"பூ. தா."

எழுசீரடியாசிரிய விருத்தம்.

திங்கண்மஹ் மூது நபி தேர்ந்தசன் மார்க்க நெறி
திக்கெலா மோங்கி வளர

தந்தமறை சொந்தமுற கந்தமிகு "நேர்வழியின்
தீப" மென நாமம் விளங்கும்

சங்கைமிக மத்ரஸா "மிஸ்பாஹுல் ஹுதா" வினைச்
சேர்ந்தவர் கலையினின்பம்

சேர்த்துத் திரட்டியே யிகபர மிரண்டினும்
சோர்வின்றி யருந்தி மகிழ்வார்

எங்கெங்கு மோங்குபுகழ்ப் பொங்கிவள ரிப்புனித
யிசையொளிரு மணி மேடையை

எவருமெய் யன்புட னிதயபரி சுத்தமுற
வெப்பொழுதும் நாடிவருவார்

மங்காத தங்கமே மாமறையி னங்கமே
மனுவேந்தன் மணி மாடமே

மேவிவரு மானந்த சோபைமிக வேயிந்த
மேதினிபு லாவி வருவாய்.



## மத்ரஸா நிர்வாகத் தலைவர்களின் தியாகம்.

(மானேஜர் மாண்பு)

அறுசீர் விருத்தம்.

எளியவர்க்கோ ராதரவா யெண்ணரிய நற்கரும
மியற்றி யன்பாய்

களிப்புடனே கடனாற்றுங் கருணைமணிக் குணநிதியாங்
குறைவிலாத

நளினமல ரல்ஹாஜ் S. E. அப்துல் காதரெனு
நியதி நாதர்

ஒளிதருவார் தினகரன்போ றாயவுளத் தோன்றலென
வுலகுளோர்க்கே.

(பிரின்ஸிபல் பேருழியம்.)

பொது நலமே பிறப்புரிமை யெனவுணர்ந்த பெருந்தகையின்
பெரியாரெங்கள்

சதுர்–மறையின் சாரமுணர்ந் தன்றுதொடுத் தின்றுவரை
சேவைநல்கும்

அதிபுனித மௌலவிஅல் ஹாஜ் N. P. முகம்மதிபு
ராஹீம் செம்மல்

பதிமகிழப் பகலிரவும் பலியாகிப் பணிபுரியும்
பான்மை என்னே!



மத்ரஸா "மிஸ்பாஹுல் ஹுதா"வின் ஸ்தாபகர்,
அல்லாஹஜ்ரத் மௌலானா மௌலவி, அல்ஹாஜ் (ஷெய்கு)
**அப்துல்கரீம் சாஹிப்** (ஆரிபுபில்லாஹ்) **அவர்கள்மீது**

# வாயுரை வாழ்த்து.

—⊂⊃—

[அருட்கவி, "அபுல்கமால்"]

## நேரிசையாகவல்.

அரியவ னருளா லருமறை விரித்த
அருளொளி விளக்கா மஹ்மது நாதர்
தருநெறி யுணர்ந்து தீனெறி விளங்க
திருநிதி யிசுலாந் தவமுறைத் தோய்ந்து
நயமுறை யனைத்தும் நன்கா ராய்ந்து
பயமிலை யெனவே பெருமதி யோர்ந்து
தனியொரு மணியாய் தானே முயன்று
இனமுந் தனமு மில்லா ராகி
கலையொளி பரப்ப கனிவொடு முயன்ற
கலியுக நாதர் கனபுகழ் தீரர்
'நேர்வழி தீபம்' நாட்டிய வீரர்
பேர்பெறு வகையைப் பகரக் கேண்மின் !
சிறுபரு வத்தே சுகம்பல விடுத்து
நறுமண முதலாய் நாடா ராகி
தந்தைதாய்த் துறந்து தனித்தோ ராகி
சிந்தையிற் றுணிந்து சீர்பெற வேண்டி
'தேவ்பந்' தெனுமா திருபதி யெனுஞ்சீர்
நாவல ரோம்பும் நற்பதி யேகி
அருமொழி யரபு மறவழி யுருதும்
பெருமொழி பார்ஸி பதமுறை யறிந்தும்
சீருஞ் சிறப்புஞ் செழித்தோ ராகி
சேருஞ் சுயபதி சிறப்பொடு வுவந்தார்.



பின்னாட் சென்றுச் செய்தொழி லெதுவென்
றுன்னு திருந்து முயர்தனிப் பொருளை
பன்னிப் பன்னிப் பலமுறை நயந்து
சென்னித் தளர்ந்து செபமதி லுறைந்து
பன்னாட்ட கழித்துப் பெரியவ னிரங்கி
சொன்னு னிச்சொல் சோதனை யகல
'கலையொளி தீபம் காண்பாய் நீ'யென
விலையறும் பணியை விதித்தான் மறையோன்
வீறுகொண் டெழுந்து வினைசெய விசைந்து
மாறுத லெதுவு மதியா ராகி
மாபெருங் கலைமா மணியொளி மிளிர
யாவரு மருந்தி யினிதுற மகிழ
பூரண மதியாய் புவியோர் போற்றி
காரண மெவையுங் கண்டறிந் துணர
நேரொளி துலங்கி நாற்றிசை பரவ
பாரொளிர் மா"மிஸ் பாஹுல் ஹுதா"வை
இறையவன் விதித்த வியல்பொடு யியற்றி
குறையற புரிந்த குணமெனச் சொல்கேன் !
அரிதரி தம்ம வரும்பணி புரிதல்
பெரிதிது வலவோ பொதுநலம் புரிமின் !
மாசெது மிலதாய் முப்பத் தாருண்
டாகிபெற் றுயர்ந்த வாராய்ச் சிப்பணி
நாடொறும் வளர்ந்து நலமுட னிலைத்து
தேடரும் புதையற் றருவது மியல்பே.
இத்தகைப் பெரும்பணி யினிதுற விதைத்த
உத்தம ரெவரென் றுணர்த்துதும் வம்மின்,
பத்தியிற் சிறந்த பெருங்குடித் தோன்றல்
நித்திய சுவர்க்க நிலைபெற் றுயர்ந்த
கண்மணி யொளிருங் கருணையங் குருவா
மண்ணலெம் மல்ஹா ஜப்துல் கரீமென்
றிப்புவி செப்பியச் செல்வச்
சிற்பியென் றென்றும்வா ழியவே.



## உத்தியோகஸ்தர்கள்,

ஹானரரி மானேஜர், ஆலிஜனுப் அல்ஹாஜ்,

**S. E. அப்துல்காதர் சாஹிபவர்கள்.** நீடூர்.

நாஜிர், ஆலிஜனுப், அல்ஹாஜ், மௌலானா மௌலவி,

**N. P. முகம்மது இப்ராஹீம் சாஹிபவர்கள்,** நீடூர்.

சத்ரெமுதர்ரிஸ், ஆலிஜனுப், மௌலானா மௌலவி,

**M. அப்துல்ஹமீது சாஹிபவர்கள்,** கிளியனூர்.

---

முதர்ரிஸ்கள்: ஆலிஜனுப்களான,

| | | | |
|---|---|---|---|
| பள்ளப்பட்டி, | மௌலானா மௌலவி, | A முகம்மது காசிம் | சாஹிப் |
| புதுநகரம், | ,, | M S அப்துல்ஹமீது | சாஹிப் |
| திருவாங்கூர், | ,, | V A முகம்மதுசாதிக் | சாஹிப் |
| லால்பேட்டை, | ,, | M முகம்மதுஆதம் | சாஹிப் |
| நீடூர், | ,, | அல்ஹாஜ், இ. அப்துல்கரீம் | சாஹிப் |
| நீடூர், | ,, | S முகம்மத் முஸ்தபா | சாஹிப் |

பிரசங்கி,

| | | | |
|---|---|---|---|
| திருப்பந்துருத்தி, | ,, | அல்ஹாஜ், S. H. ஷெய்க்முகம்மத் | சாஹிப் |
| ,, பள்ளப்பட்டி, | ,, | வா. மு. அப்துல்ரஹீம் | சாஹிப் |
| நெய்வாசல், | முஅல்லிம் ஜனுப், | பா. ஹ. ஒலிமுகம்மது | சாஹிப் |
| ஷை | ,, ,, | ஆ. ஒலிமுகம்மது | ,, |
| ஷை | ,, ,, | மு. அப்துல்வஹ்ஹாப் | ,, |
| ஷை | டீச்சர் ,, | A. முகம்மதுரஹ்மதுல்லா | ,, |
| ஷை | ,, | ஸ்ரீ M. சீனிவாச ராவ் | |
| கணக்கு, | பறங்கிப்பேட்டை, ஜனுப், | மெ. பாட்சாமியான் | ,, |
| ,, | நீடூர் ,, | B அப்துல்ரஹ்மான் | ,, |
| றக்கீப், | கொள்ளிடம், ஜனுப், | மெ. காதர்மெய்தீன் | ,, |



| | | | |
|---|---|---|---|
| பில் கலெக்டர், | ,, | மு. அஹமது | சாஹிப் |
| ,, | ,, | E K அப்துல்சத்தார் | ,, |
| ,, | ,, | M S ஷெய்குயூசுப் | ,, |
| ,, | ,, | சி. முகம்மதுஹஸன் | ,, |
| ,, | ,, | P அப்துல்ஹமீது | ,, |
| தோட்டவேலை | ,, | B ஷெய்க்அப்துல்காதர் | ,, |
| தப்பாஹ் | ,, | H ஹிதாயதுல்ஹக் | ,, |
| உதவி தப்பாஹ் | ,, | செ. நல்லமுகம்மது | |
| ,, | ,, | லா. முகம்மதுஉசேன் | |
| உதவி உத்தியோகஸ்தர் | | | |
| நாகப்பட்டணம். | ,, | M அப்துல்ஹமீது | ,, |



## நமது மத்ரஸாவில் கல்வி பயின்றுவரும் மாணவர்கள்.

ஜுமராக்கள்,

**7-வது.** (தஹ்ஸீல் வகுப்பு.)

சத்திரமனை, மௌலவி, சதகதுல்லா சாஹிப்
கோயமுத்தூர், மௌலவி, செய்யதுமுகம்மது சாஹிப்
ஆயங்குடி, மௌலவி, தாஜுத்தின் சாஹிப்

**6-வது.**

| | |
|---|---|
| சங்கனுச்சேரி, P P அஹ்மத் | சாஹிப் |
| தி. பேட்டை, S M N முகம்மத் மீரான் | ,, |
| திட்டுவிளை, M அஹ்மத்மீரான் | ,, |
| நாகப்பட்டணம், M அப்துல்ஹமீத் | ,, |
| கோட்டைகுப்பம், K A முகம்மத் யஹ்யா | ,, |
| கிளியனூர், A முகமத்கமாலுதீன் | ,, |
| லால்பேட்டை, T A அப்துர்ரஹ்மான் | ,, |

**5-வது.**

வடகரை, M முகம்மத்யூசுபு — சாஹிப்
திருபரன்தாள், A அப்துல்வாஹித் ,,
கரிசல்பட்டி, A S முகம்மத்கமாலுத்தீன் ,,
கல்லார், M முகம்மத்சுல்தான் ,,
புதுஆத்தூர், முகம்மத்ஹனீப் ,,
கந்தகுமாரம், N Y முகம்மத்ரஹ்மதுல்லா ,,
கோயம்புத்தூர், S M முகம்மதலி ,,

**4-வது.**

பள்ளப்பட்டி, A N அப்துல்மஜீத் ,,
கடயநல்லூர், ஹாபிஜ், K A செய்யித்முகம்மத் ரஹ்மதுல்லாஹ்
மணிக்கிராமம், முகம்மத்கஜ்ஜாலி — சாஹிப்
இலுப்பூர், S S முகம்மத்அப்துல்லாஹ் ,,
நெல்லிகுப்பம், T A ஷிஹாபுத்தீன் ,,
திருநாகேஸ்வரம், அப்துல்ரஷீத் ,,
B முட்லூர், K அப்துல் சமத் ,,
அன்னவாசல், E S M முகம்மத்உமர் ,,
திருவாரூர், A அப்துஸ்ஸலாம் ,,
புதுநகரம், M S அப்துல்ஹகீம் ,,
இளங்காகுரிச்சி, M அப்துல்கரீம் ,,
ஷை K அப்துல்கரீம் ,,
ஷை M பத்ருத்தீன்அஹ்மத் ,,

**3-வது.**

கடயநல்லூர், S S அப்துல்மன்னான் ,,
சிலோன், அப்துல்ஹமீத் ,,
திருப்பத்தூர், S M பீர்முகம்மத் ,,
நிந்தவூர் (சிலோன்) M P கலந்தர்லெப்பை ,,
தென்காசி, ஹாபிஜ், M S அஹ்மத்மஸ்ஊத் ,,
வடகரை, முகம்மத்காசிம் ,,



3-வது (தொடர்ச்சி)

இரவாஞ்சேரி, A M அஷ்ரப்அலீ — சாஹிப்
சம்மாந்துரை (சி) O முகம்மதலி ,,
கீரனூர், A M நூர்முகம்மத் ,,
திருவாங்கூர், M முகம்மத்மூஸா ,,
திருவாரூர்; V A அப்துல்வஹ்ஹாப் ,,
சித்தூர், V M முகம்மத்முஸ்தபா ,,
அருமானூர்: H A அப்துர்ரஹீம் ,,

**2-வது.**

பத்தனுபுரம் (திருவாங்கூர்) K M இஸ்மாயில் ,,
தோப்பூர் (சிலோன்) M சதகதுல்லாஹ் ,,
கடயநல்லூர், S S முகம்மத்யூசுப் ,,
தோப்பூர் (சி) K M அப்துல்லாஹ் ,,
நெல்லிகுப்பம், A அப்துல்ஹாதி ,,
எலந்தங்குடி, K M முகம்மத் இப்ராஹீம் ,,
விஜயபுரம், அப்துல்கனி ,,
துவாங்குரிச்சி, ஷேக்முகம்மத் ,,
அய்யம்பேட்டை, J N முகம்மத்இஸ்ஹாக் ,,
ஷை செய்யித்முகம்மத் ,,
எள்ளேரி, S M அப்துஷ்ஷகூர் ,,
சாயிந்தமருதூர் (சி) M ஹாமித்ஸயீத் ,,
புதுச்சேரி, A அப்துல்ஜலீல் ,,
கருப்பூர், S A ஷம்ஸுத்தீன் ,,
தொண்டி, நெய்னாமுகம்மத் ,,
நெல்லிகுப்பம், P அப்துல்ஹமீத் ,,
நாச்சிகுளம், A M முகம்மத்உமர் ,,
சோழபுரம், T K முகம்மத்தமீம் ,,
ஷை முகம்மத்ஜலாலுத்தீன் ,,
கொள்ளிடம், அப்துர்ரஹீம் ,,
நாகூர், முகம்மத்கஜ்ஜாலி ,,

